[24th February 1961

THE HON. SRI M. A. MANICKAVELU : மந்திரத்தால் மாங்காய்கூட விழாது என்கிறார்கள். ஒரு ஸ்டேஷன் மாஸ்டர்கூட துணியைக் கிழித்து ஏதோ போடுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள்.

SRI S. M. ANNAMALAI : இந்த பாம்புக்கடியைத் தீர்ப்பதற்கு விஞ்ஞான மருந்துகளைவிட பச்சிலை மருந்துகள் மிகவும் நல்லதென்று சொல்லப்படுகிறது. அப்படியானால் எந்தெந்த பச்சிலை மருந்துகள் இதைக் குணப்படுத்துகிறதோ அதை ஆராய்ந்து அந்த மருந்துக்களை ப்ரைமரி ஹெல்த் சென்டர்ஸ் அல்லது ரூரல் டிஸ்பென்ஸரிகளில் வைக்க ஏன் அரசாங்கம் முன்வரக்கூடாது? ஏன் இதுபற்றி ஆராய்ச்சி செய்யக்கூடாது?

THE HON. SRI M. A. MANICKAVELU : பச்சிலை மருந்தை உபயோகிப்பதற்கு முன் அதை ரிசர்ச் செய்து எப்படிப்பட்ட குணம் இருக்கிறது என்று பார்க்கவேண்டும். பச்சிலை மருந்தால் குணம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்கள், ஆனால் அதுபற்றி ரிசர்ச் செய்யவேண்டும், இதற்காக ரிசர்ச்கூட நடக்கிறது. நல்ல முடிவிற்கு வந்தால் அப்பொழுது அதை பயன்படுத்திக் கொள்ளலாம்.

*Irrigation schemes*

* 451 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா?

(அ) முதல் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலம் பாசன வசதி எங்கெங்கு கிடைத்தன?

(இ) ஒவ்வொரு திட்டப் பகுதியிலும் ஒவ்வொரு ஏக்கர் பாசன வசதிபெற சர்க்காருக்கு செலவான தொகை எவ்வளவு?

(உ) மூன்றாவது திட்டத்தில் ஒவ்வொரு ஏக்கருக்குப் பாசன வசதிபெற எவ்வளவு செலவாகும்.

THE HON. SRI P. KAKKAN : (அ), (இ) & (உ) A statement [a] containing the required information is placed on the table of the House.

SRI N. R. THIAGARAJAN : முதல் திட்டத்தில் கிருஷ்ணகிரியில் ஏக்கருக்கு மூவாயிரத்திற்கு மேல் செலவழிக்கப்பட்டிருக்கிறது. வீடூரில் கிட்டத்தட்ட 3,000 வரை செலவழிக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது திட்டத்தில் 5,000 முதல் 8,000 வரை செலவழிக்கப்படுகிறது. இப்படி தண்ணீர் வரக்கூடிய இடங்களில், பெட்டர்மென்ட் லெவி மாதிரி ஏதாவது வசூலிக்கப்படுகிறதா?

THE HON. SRI P. KAKKAN : கிருஷ்ணகிரி, வீடூர் பகுதி போன்றவைகள் பிற்பட்ட பகுதிகள், ஏழை மக்கள் அதிகமுள்ள பகுதி என்ற முறையில் அரசாங்கம் பணம் கூடுதலானாலும்

---

a Printed as Appendix II on page 490 infra.

24th February 1961]

பரவாயில்லை என்ற நோக்கத்துடன் செய்கிறது. வரி வசூல் பற்றி பின்னால்தான் முடிவுக்கு வரவேண்டும். இப்பொழுது அதுபற்றி என்னிடம் தகவல் இல்லை.

**SRI S. M. ANNAMALAI :** மேஜை மீது வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையில் சென்னை மாநிலத்திற்கு நீர்ப்பாசனத்திற்காக வேண்டி 40 கோடி ரூபாய் கேட்டதற்கு 27 கோடி ரூபாய்தான் தந்திருக்கிறார்கள். அதில் 21 கோடி ரூபாய் பரம்பிக்குளத் திட்டத்திற்கு செலவழிக்கப்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. மீதி இருப்பது 6 கோடி ரூபாய்தான். மேற்கொண்டு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் பாசன வசதிக்காக செலவிட வேண்டிய பணத்தை எப்படிப் பெறுவது, அதற்கு மேற்கொண்டு செலவிட வேண்டிய பணத்திற்கு அரசாங்கம் என்ன திட்டமிட்டிருக்கிறார்கள்?

**THE HON. SRI P. KAKKAN :** பரம்பிக்குளத் திட்டம் ஏற்கனவே எடுத்துக்கொள்ளப்பட்ட திட்டம். அங்கு வேலை முடிவடையவேண்டியிருப்பதால் 21 கோடி ஒதுக்குவதென முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்த 6 கோடிக்கு மேல் எந்தெந்த திட்டங்களை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று அரசாங்கம் விரும்புகிறதோ அதுபற்றி —பரிசீலனைசெய்து பின்னர் ஒரு முடிவுக்கு வரவேண்டும்.

**SRI S. NAGARAJA MONIGAR :** ஒரு சில இடங்களில் மட்டும் நீர்ப்பாசன வசதிகள் செய்வதைத் தவிர்த்து இந்நாட்டில் பரவலாக எல்லாயிடங்களிலும் நீர்பாசனவசதிகள் செய்யவேண்டுமென்று அரசாங்கம் கருதி சிலயிடங்களில் அதிகமாக செலவு செய்துதான் நீர்பாசன வசதிகளை கொஞ்சமாக செய்யவேண்டியிருக்கும் என்பது சர்க்கார் கொள்கை அல்லவா? ஆகவே சிலயிடங்களில் சிறிது அதிகமாக பணம் செலவாவதை சர்க்கார் பொருட்படுத்த மாட்டார்கள் என்பது உண்மையா?

**THE HON. SRI P. KAKKAN :** அங்கத்தினர் அவர்கள் சொல்வது முற்றிலும் உண்மை.

**SRI S. M. ANNAMALAI :** மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 10,200 கோடி செலவழிக்கும்போது இந்த சர்க்கார் 40 கோடி கேட்டதற்கு 27 கோடி தருவதாக ஒதுக்கியிருக்கிறார்கள். முன்பு இட்டதை விட சிறிது கூடுதலாக இப்பொழுது 12,000 கோடி என்று மாற்றியிருப்பதாக சொல்லப்படுகிறது. ஆகையினால் நமது மாநிலத்திற்கு இன்னும் கூடுதலாக ஒதுக்கவேண்டும், நமக்கு 40, 50 கோடி தேவை என்று ஏன் இந்த சர்க்கார் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்கக்கூடாது?

**THE HON. SRI P. KAKKAN :** நன்கு பரிசீலனை செய்துதான் ஒரு முடிவிற்கு மத்திய அரசாங்கமும் மாகாண சர்க்காரும் வந்திருக்கிறது. இத்தகைய திட்டங்கள் மட்டுமல்ல, சிறிய நீர்பாசனத் திட்டங்களுக்காகவும் செலவு செய்யப்பட இருக்கிறது. மத்திய அரசாங்க உதவியும் நமக்கு அதிகம் கிடைக்கும்.

[24th February 1961

**SRIMATHI A. S. PONNAMMAL** :அமைச்சர் அவர்கள் கொடுத்த பதிலில், பிற்போக்கு பகுதிகளின் நலத்திற்காக அதிக பணம் செலவானாலும் பரவாயில்லையென்று சொன்னார்கள். மதுரை ஜில்லா நிலக்கோட்டை தாலூகாவில் சாத்தியார் திட்டம் கடந்த நான்கு வருடங்களாக மேலே போய் கீழே விழுந்து கொண்டிருக்கிறது. இப்பொழுது சர்க்காரிடம் இருக்கிறது. அது, "அன் எக்கனமிக்கல்" என்று சொல்லி தள்ளிவைக்கப் பட்டிருக்கிறது என்று அறிகிறேன். பிற்பட்ட பகுதிகள் சம்பந்தப்பட்டவரையில், இதுபோன்றவற்றை உடனடியாக சாங்க்ஷன் செய்யக்கூடிய நிபந்தனையை அரசாங்கம் உண்டாக்குமா?

**THE HON. SRI P. KAKKAN** : தள்ளி வைக்கப்பட்டிருக்கிறது என்று அறிகிறேன் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள், ஆகவே அதுபற்றி தனிக்கேள்வி கேட்டால் சொல்கிறேன்.

**SRI A. VEDARATHNAM** :மிக லாபகரமான முறையில் பாசன வசதி அளிக்கக்கூடிய காவேரி டெல்டாவில் கடலில் வீணாகப் போகிற ஜலத்தை, சில லட்சம் ரூபாய் செலவழித்தால் பல்லாயிரக் கணக்கான ஏக்கர்களுக்கு பாசன வசதி அளிக்கும் திட்டங்களை நடத்த வசதியிருக்கிறதே, அதை அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கிறதா? அது பார்ட் 2 ஸ்கீமில் சேர்க்கப்பட்டிருக்கிறதா?

**THE HON. SRI P. KAKKAN** : அதுவும் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்துவருகிறது. வீணாகப் போகும் தண்ணீரை தடுத்து நிறுத்தி ஏதாவது செய்ய முடியுமா என்பது அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது. இவை, அங்கத்தினர் அவர்களுக்குத் தெரியும். தஞ்சை ஜில்லாவில் வீணாகப் போகும் தண்ணீரை பயன்படுத்த, பம்பிங் ஸ்கீம்ஸ் கொண்டு வரப்பட்டுள்ளது. மேலும் பல பம்பிங் ஸ்கீம்ஸ் ஏற்படுத்த பரிசீலனை செய்து கொண்டு வரப்படுகிறது.

*Minor Ports*

*** 452 *Q*.—SRI A. VEDARATHNAM** : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா?

(அ) 1960-ம் வருஷ ஆகஸ்ட் மீ 20உன் 345 என் கேள்விகளுக்கு அளித்த பதிலையொட்டி நம் மாநிலத்திலுள்ள சிறு துறை முகங்கள் அனைத்தையும் திறந்து போக்குவரத்துக்குத் தகுதியுடையவைகளாகச் செய்து கரையோரமுள்ள படகு சர்வீஸ் ஒன்றை ஆரம்பித்து போக்குவரத்தில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைக் குறைக்க உத்தேசம் உண்டா?

(இ) அப்படியானால் அதன் விபரம் என்ன?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) The question of introducing regular shipping service on the coast with small vessels to serve the needs of minor ports is under the consideration of the Government of India.